Licensed to Post t Withou Pre-Payment Licence No 6T N MS CPP 55

ANNA Leading Progressive Tamil Daily to the People

# புரட்சித்தலைவர் புதன்கிழமை

Regd No. TN MS [C] 244 Phone 420212 4 பக்கம் விலை 70 காசு




மலர் 12 சென்னை வெள்ளி 23-10-87 வெளியூர் சனி 24-10-87 இதழ் 7

# காலைதாயகம் திரும்புகிறார்

சென்னை, அக். 23- முதல்வர் புரட்சித்தலைவர் அமெரிக்காவில் இருந்து 28ம் தேதி சென்னை வருகிறார் பம்பாய் வழியாக புதனன்று காலை 9.15 மணிக்கு மீனம்பாக்கம் விமான நிலையம் வந்து சேருகிறார்.



மருத்துவ பரிசோதனைக்காக அமெரிக்கா சென்றமுதல்வர்புரட்சித் தலைவர் இம்மாதம் 26-ந்தேதி அமெரிக்காவில் இருந்து புறப்பட்டு பம்பாய் வழியாக 28-ந் தேதி காலை சென்னை வந்தடைகிறார்.

முதல்வர் புரட்சித் தலைவருடன் அவரது துணைவியார் ஜானகி அம்மையார் தனிச்செயலாளர் பரமசிவம் ஆகியோரும் வருகின்றனர்.

தமிழக அரசின் பத்திரிகை குறிப்பில் இத்தகவல் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## வரவேற்பு: நாவலர் தகவல்

முதல்வர் புரட்சித் தலைவர் 28 ந் தேதி காலை 9.15 மணிக்கு சென்னை வந்து சேருகிறார் என்று நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தெரிவித்தார்.

நிருபர்களிடம் அவர் கூறியதாவது:-

அமெரிக்க நேரப்படி 26ம் தேதி நியூயார்க்கிலிருந்து புறப்படுகிறார் இந்தியநேரப்படி 27 ந்தேதிபுறப்படுகிறார்.

முதல்வர் புரட்சித் தலைவருக்கு வரவேற்பு அளிப்பது குறித்து இன்னும் 2 நாளில் அறிவிக்கப்படும்.

எந்த விமான நிலையத்தில் வந்து இறங்குகிறார் என்று அறிவிப்பு கிடைத்தபிறகு தெரிவிக்கப்படும்.

முதல்வர் புரட்சித்தலைவர் வந்த பிறகு இலங்கை பிரச்சினை குறித்து பிரதமருடன் பேச்சு வார்த்தை நடத்த டெல்லியுடன் தொடர்பு கொள்வார் பிரதமருடன் தொடர்பு கொண்ட பிறகு டெல்லி சென்று இலங்கை பிரச்சினை பற்றி பேசுவார்.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

## புரட்சித் தலைவரை சந்தித்தது பற்றி பிரதமர் ராஜீவ் பேட்டி

அமெரிக்கா சென்று திரும்பிய பிரதமர் ராஜீவ்காந்தி விமானத்தில் வைத்து நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார்.

'இந்து' ஏடு பேட்டி விவரத்தை வெளியிட்டுள்ளது.

கேள்வி: இலங்கை பிரச்சினையில் அமெரிக்கா என்ன கருதுகிறது? அமெரிக்காவில் எம்.ஜி,ஆரைப் பார்த்தீர்களே! என்ன பேசினீர்கள்? எம். ஜி. ஆர். கருத்து என்ன?

பிரதமர்: அமெரிக்காவின் கருத்து அனுசரணையாக உள்ளது. அவர்கள் இந்தியாவுக்கும், இலங்கைக்கும் ஆதரவுகொடுக்கிறார்கள் எம்.ஜி.ஆரைச் சந்தித்தேன். இலங்கை நிலைமைகள் பற்றி பேசினோம். இலங்கை நிகழ்ச்சிகள் பற்றி தமிழக முதல்வர் சில கவலைகளை தெரிவித்தார். நான் அந்தபிரச்சினைகளைப்பற்றி அவருக்கு விளக்கம் கொடுத்தேன் இந்தியா திரும்பியதும் மீண்டும் இது பற்றிப் பேசுவோம் என்று முதல்வர் கூறினார்.

இந்து 23-10-87

## தமிழ்பகுதிகளில் சிங்களவர் குடியேறஅனுமதிஇல்லை: பிரதமர் ராஜீவ் உறுதி

வாஷிங்டன், அக். 23- வழக்கத்துக்கு மாறாக புவியியல் எல்லைகளை மாற்றி தமிழ் பகுதிகளில் சிங்களவர்கள் குடியேற முனைந்தால் அதை இந்தியா ஒரு போதும் அனுமதிக்காது என்று பிரதமர் ராஜீவ்காந்தி திட்டவட்டமாக அறிவித்தார்.

அமெரிக்கா சென்றிருந்த போது பிரதமர் ராஜீவ் காந்தி ஜனாதிபதி ரீகனை சந்தித்துப் பேசினார் இந்திய இலங்கை ஒப்பந்தத்தை அப்போது ரீகன் மனம் திறந்துப் பாராட்டினார்.

ஒப்பந்தத்தை ஏற்படுத்திய பிரதமர் ராஜீவ்காந்தியையும் ஜனாதிபதி ஜெயவர்த்தனேவையும் ரீகன் புகழ்ந்து பேசினார்.

### பிரதமரின் பதில்

எவ்வவு நாள் இந்திய அமைதிப்படையினர் இலங்கையில் இருப்பார்கள் என்ற கேள்விக்குப் பதில் அளித்த பிரதமர் ராஜீவ் இல்ங்கை ஜனாதிபதி ஜெயவர்த்தனே விரும்பும்வரை அமைதிப் படையினர் அங்கே இருப்பார்கள் என்றும் கூறினார்.

இலங்கை தமிழர்கள்அனைவரின் ஏகோபித்த ஆதரவு விடுதலைப்புலிகளுக்கு இல்லை தமிழர்கள் அனைவருக்கும் விடுதலை புலிகள் தான்பிரதிநிதிகள்என்றநிலையும்அங்கேஇல்லை ஆனாலும் அளவுக்கு அதிகமாகவே பெருந்தன்மை நோக்குடன் விடுதலைப் புலிகளின் கோரிக்கைகளுக்கு இடங்கொடுத்தோம் அவர்களின் அனைத்து கோரிக்கைகளையும் இந்தியா ஏற்றுக்கொண்டது.

இவ்வாறு பிரதமர் ராஜீவ் காந்திகூறினார்.

வாஷிங்டனில் நடைபெற்ற நிருபர்கள் கூட்டத்திலும் ராஜீவ்காந்தி பேசினார். நிருபர்கள் கேட்ட கேள்விகளுக்கு அவர் பதில் அளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:-



வழக்கப்படி உள்ள புவி இயல் எய்லைப் பிரிவுகள் அப்படியேதான் இருக்கும். தமிழர் பகுதிமளை திருத்தி அமைப்பதோ அல்லது சிங்களவர்கள் தமிழ்பகுதிகளில் குடியேற்றுவதையோ இந்தியா ஒருபோதும் அனுமதிக்காது.

தமிர் பகுதிசளில் சிங்கள குடியோற்றம் இருக்காது.

ஒப்பந்தம் முழு அளவில் நிறைவேறுவதில் விடுதலைப் புலிகளும் மற்றவர்களும் ஒத்துழைப்புத் தர வேண்டும்

இவ்வாறு பிரதமர் ராஜீவ் காந்தி கூறினார்.

## வெள்ளம்: வீடு இழந்த மக்களுக்கு உதவி

மதுரை, அக். 23- ஆண்டிபட்டியில் ஏற்பட்ட திடீர்வெள்ளத்தால் 124 குடிசைகள் பாதிக்கப்பட்டன பாதிக்கப்பட்ட மக்களுக்கு பணம், வேட்டி சேலை வழங்கப்பட்டன. ஆண்டிபட்டிதொகுதியைச் சேர்ந்த பாலூற்று கிராமத்தில் திடீர் வெள்ளத்தால் 124குடிசைகள் பாதிக்கப்பட்டன.

மதுரை மாவட்டக் கலெக்டர் மற்றும் டி.ஆர்.ஓ. வாசுதேவன்மற்றும் அதிகாரிகள் அங்குசென்று பாதிக்கப்பட்ட மக்களின் குடும்பத்திற்கு 400 ரூபாய், மற்றும் துணி, மண்ணெண்ணை ஆகியவற்றை வழங்கினர்.

மதுரையிலும் நேற்றுநல்ல மழை பெய்தது தல்லாகுளம் பகுதியில் மழைதண்ணீர் தேங்கியிருந்தது.

## ஈழத் தமிழர் நலன் காக்க இந்திய ராணுவம் உறுதி

கொழும்பு, அக். 23- ஈழத்தமிழர்களின் அனைத்து நலன்களையும் பாதுகாத்து அவர்களின் வாழ்க்கைத்தரம் வளம் பெற எல்லா உதவிகளும் செய்துதரப்படும் என்று இந்திய ராணுவம் உறுதி அளித்துள்ளது.

இந்திய அமைதிப் படையினர்மீது விடுதலைப் புலிகள் தாக்குதல் நடத்தி வருகிறார்கள். தங்களுடைய ஆயுதங்களை ஒப்பந்தப்படிஅமைதிப் படையினரிடம் ஒப்படைக்காமல் போரிட்டு வருகிறார்கள்,

விடுதலைப் புலிகளிடம் உள்ள ஆயுதங்களை பறிமுதல் செய்வதில் அமைதிப் படையினர் ஈடுபடடு வருகிறார்கள்.

யாழ்ப்பாணத்தின் முக்கிய இடங்கள் உள்பட பெரும்பான்மைபகுதிகளைஅமைதிப் படையினர் தங்கள் வசமாக்கிக் கொண்டு விட்டனர்.

ஈழத் தமிழ் மக்களுக்கு அனைத்து உதவிகளும் செய்து தரப்படும் என்று இந்திய ராணுவம் உறுதி அளித்துள்ளது.

ஆயுதங்களை விடுதலைப் புலிகள் ஒப்படைத்துவிட்டு சரணடைய வேண்டும் என்றும் அமைதிப்படையினர் கேட்டுக்கொண்டுள்ளனர்.

இந்த வாசகங்கள் அடங்கிய துண்டு பிரசுரங்களை இன்று அமைதிப் படையினர் ஈழத்தமிழ் மக்களுக்கு வினியோகம் செய்தனர் விமானம் மூலமும் துண்டுப் பிரசுரங்கள் யாழ்ப்பாணப் பகுதிகளில் போடப்பட்டன.

ஆயுதங்களை ஒப்படைத்து விட்டுசரணடையும் விடுதலை புலிகள் அனைவருக்கும் மறு வாழ்வு அளிக்கப்படும் என்றும் இந்திய ராணுவம் உறுதி அளித்துள்ளது.

விடுதலைப்புலிகள் கோவில்களில் இருந்து கொண்டு ராணுவத்தினரையும். தமிழ்மக்களையும் தாக்கி வருவதாக செய்திகள் வந்துள்ளன.

### கவர்னர்கள் மாநாடு

புதுடெல்லி, அக். 23- மாநில கவர்னர்கள் மாநாடு 29-ந் தேதி டெல்லியில் நடைபெறுகிறது.

ஜனாதிபதி மாளிகையில் நடைபெறும் இந்த மாநாடு இரண்டு நாட்கள் நடைபெறுகிறது.

மாநாட்டில்மாநிலங்களின் அரசியல் சூழ்நிலை மற்றும் நிர்வாக செயல் முறை பற்றியும் வகுபபு கலவரத்தை ஒடுக்குவது பற்றியும் விவாதிக்கப்படலாம் என தெரிகிறது.

## பிடித்து வைக்கப்பட்டிருந்த இந்தியவிமானம்டெல்லிதிரும்புகிறது

பம்பாய், அக். 23- போதை மருந்துகளை பெரும் அளவில் கடத்தியதாக குற்றம் சாட்டப்பட்டு கடந்த 2 மாதமாக நைஜீரியாவில் பிடித்து வைக்கப்பட்டிருந்த இந்திய விமானம் இன்று பம்பாய்க்கு கொண்டு வரப்படுகிறது.

நைஜீரியாவின்தலைநகரான லாகோசுக்கு கடந்த ஆகஸ்ட் மாதம் 25-ம் தேதி சென்ற இந்திய விமானத்தைநைஜீரிய அரசு பிடித்து வைத்தது.

முன்னதாக அந்த விமானத்தை சோதனையிட்ட நைஜீரிய விமான போக்குவரத்து அதிகாரிகள் விமானத்தில் 32.5 கிலோ கிராம் எடையுள்ள போதை பொருட்கள் மறைத்து வைக்கப்பட்டிருந்ததாக குற்றம் சாட்டினர். இதைத் தொடர்ந்து விமானத்தை விமான நிலைய அதிகாரிகள் நிறுத்தி வைத்தனர் விமானத்தில் இருந்த இந்திய விமான ஓட்டி உட்பட மூன்று அதிகாரிகளும் நிறுத்தி வைக்கப்பட்டனர்.

இதுபற்றி இந்திய அரசு நைஜீரிய அரசுடன் பேச்சு வார்த்தை நடத்தியது மத்திய வெளி விவகாரத்துறை செயலாளர் ஆல்பிரட்கான் சால்வ்ஸ் மற்றும் அதிகாரிகள் சித்து சி. எல். சர்மா ஆகியோரும் நைஜீரியா சென்று ஆலோசனை நடத்தினார்கள்,

இதைத்தொடர்ந்து ஒரு உடன்பாடு ஏற்பட்டது அதன்படி இந்திய விமானத்தை விடுவிக்க நைஜிரியா ஒப்புக்கொண்டது.

இந்திய விமானம் இன்று பம்பாய் விமான நிலையத்துக்கு வந்து சேரும் அதனுடன் விமான ஓட்டி மற்றும் அதைச்சேர்ந்த 2 பொறியாளர்களும்வருகிறார்கள்.

இந்திய விமானத்தை விடுவிக்க நைஜீரிய அரசு 32 மில்லியன் டாலருக்கு (சுமார் 40 கோடி ரூபாய்) வங்கி உத்தரவாதம் வேண்டும் என்று இந்திய அரசை கேட்டிருந்தது.

## பேச்சு நடத்த போராளிகள் தாங்களே முன் வரவேண்டும்: என். டி. ராமராவ் கோரிக்கை

சென்னை, அக். 23- பேச்சுவார்த்தை நடத்த போராளிகள் தாமாக விருப்பப்பட்டு முன் வர வேண்டும் என்று ஆந்திர முதல்வர் என்.டி.ராமராவ் கேட்டுக்கொண்டார்,

சென்னையில் தி.மு.க. தலைவர் கருணாநிதி கூட்டிய கூட்டத்தில் என்.டி ராமராவ் பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

நம் சீலம் பஞ்சசீலம் ஒரு நாடு வேறு ஒரு நாட்டிற்கு சேனையை அனுப்புவதை எப்பொழுதும் நாம் கண்டித்து வந்திருக்கிறோம்.

சர்வதேச நடை முறை சம்பிரதாயம்இதுவல்லஎன்று எல்லா சர்வதேச அரங்குகளிலும் சொல்லி வந்திருக்கிறோம் சமாதான சேனை இதற்கு ஒரே விதிவிலக்கல்லவா?

மதுரையில் நடைபெற்ற "டெசோ" மாநாட்டில் நான் கேட்டுக்கொண்டேன்.

நம் அருமை அண்ணா அவர்கள் காட்டிய கடமை, கண்ணியம் கட்டுப்பாடு வேண்டும் என்று!

இங்கு நான் கோருவது கட்டுப்பாட்டுடன் கட்டுப்படு இல்லையேல்எல்லைஇல்லை, நம் தொல்லைகளுக்கு.

தமிழ்ப்புலிகள் தாமாக விருப்பப்பட்டு பேச்சுவார்த்தைக்கு வாவிழையவேண்டும் வரவேண்டும் இந்தியஅரசும் இந்த வட்டத்தில் நின்று சமரசம் காணவேண்டும்.

இவ்வாறு ஆந்திர முதல்வர் என் டி ராமராவ் கூறினார்.

## இலங்கை தமிழ்மாநில தேர்தல் எப்போது?

கொழும்பு, அக். 23 இலங்கையின் வடக்கு, கிழக்குப் பகுதிகள் இணைக்கப்பட்டு அமையவிருக்கும் தமிழ் மாநிலத்தில் தேர்தல் எப்போது நடைபெறும் என்பதுபற்றி ஜனாதிபதி ஜெயவர்த்தனே அறிவித்திருக்கிறார்.

இலங்கை அரசின் நாடாளுமன்ற பிரிவுக்கூட்டம் நேற்று கொழும்புவில் நடைபெற்றது அதில் கலந்து கொண்டு பேசிய ஜனாதிபதி ஜெயவர்த்தனே கூறியதாவது.

இந்திய-இலங்கை ஒப்பந்தப்படி தமிழ் போராளிகள் அனைவரும் தங்கள் வசம் உள்ள ஆயுதங்களை இந்திய அமைதிப் படையினரிடம் ஒப்படைக்க வேண்டும். போர் நடவடிக்கைகளில் ஈடுபட்டுவரும் தமிழ் போராளிகள் அதை நிறுத்தவேண்டும்.

அப்படி போர் நடவடிக்கைகள் நிறுத்தப்பட்டு ஆயுதங்கள் அனைத்தும்முழுமையாக ஒப்படைக்கப்பட்ட பின்னர் தான் தமிழ் மாநிலத்தில் தேர்தல் நடக்கும்.

இவ்வாறு ஜெயவர்த்தனே கூறினார்.

## தலைமைக் கழக அறிவிப்பு

இதயதெய்வம்

# புரட்சித் தலைவர் பிறந்தநாள் விழா

மற்றும்

புரட்சித்தலைவர் தமிழகத்தின் முதல்வராக ஆட்சிப் பொறுப்பினை ஏற்று 10 ஆண்டுகள் நிறைவுப்பெற்று முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் அமைந்த கழக அரசு பதினொன்றாம் ஆண்டில் வெற்றிகரமாக ஆட்சி நடத்தி வருவதையொட்டி பொற்காலஆட்சி படைத்த புரட்சித்தலைவர் அரசு இது வரை ஆற்றிய அரும்பெரும் பணிகள் பற்றிய

## சாதனை விளக்கப் பொதுக்கூட்டங்கள்

### 23-10-1987 வெள்ளிக்கிழமை

சென்னை

சீனிவாசபுரம்

மயிலைத்தொகுதி

சிறப்புரை

மாண்புமிகு அமைச்சர்
திரு. கே. கே. எஸ். எஸ். ஆர். இராமச்சந்திரன் அவர்கள்

திரு. பா. அங்கமுத்து அவர்கள்
(தலைவர்-தமிழ்நாடு குடிசை மாற்று வாரியம்)

கவிஞர். முத்துராமலிங்கம் அவர்கள்
(தலைவர் தமிழ்நாடு மீன் வள மேம்பாட்டுக்கழகம்)

திரு. இ. மதுசூதனன் அவர்கள்
(சென்னை மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றச் செயலாளர்)

திருமதி பா வளர்மதி
எம் எல் ஏ அவர்கள்

கூட்டஏற்பாடு

திரு எம் கே பாலன் அவர்கள்
[மயிலை பகுதி கழகச் செயலாளர்]

திரு என் கே. சூரி அவர்கள்

திரு. டி பி. துரை அவர்கள்
(பொன்மனச் செம்மல் புரட்சித் தலைவர் எம் ஜி ஆர் மன்றம்)
மற்றும் சீனிவாசபுரம் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

### 23-10-1987 வெள்ளிக்கிழமை

சென்னை

தி. நகர் தொகுதி

118-வது வட்டம்

சிறப்புரை

மாண்புமிகு அமைச்சர் திரு. க. ராசாராம் அவர்கள்

திரு இ. மதுசூதனன் அவர்கள்
சென்னை மாவட்ட எம்.ஜி.ஆர் மன்றச்செயலாளர்

கூட்ட ஏற்பாடு

திரு கே செல்வராஜ் அவர்கள
118-வது வட்ட கழகச்செயலாளர்

திரு ஆர் பட்டாபி அவர்கள்

### 24.10-1987 சனிக்கிழமை

திருவொற்றியூர் நகரம்

செங்கை மாவட்டம்

சிறப்புரை

திருமதி. ஈ.வி கே. சுலோசனா சம்பத் அவர்கள்
தலைவர்-தமிழ்நாடு தொழில்வளர்ச்சி நிறுவனம்

மதுரை செல்வி வளர்மதி அவர்கள்

திருமதி வண்ணை அனுராதா அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு. கே. குப்பன் அவர்கள்
(திருவொற்றியூர் நகர கழகச்செயலாளர்)

ஜெயலலிதா எம்.பி,
கொள்கைபரப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14
23-10-1987

# ஈழத் தமிழர்களுக்காக முதலைக் கண்ணீர் வடிக்கும் கருணாநிதி

திருச்சி, அக். 23- ஈழத்தமிழர்களுக்காக கருணாநிதி முதலைக் கண்ணீர் வடிக்கிறார் என அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

திருச்சியில் நடந்த கழக 16ம் ஆண்டு துவக்க விழா கூட்டத்தில் அமைச்சர் திருநாவுக்கரசு பேசியதாவது:,

1972ம் ஆண்டு புரட்சித் தலைவர் அண்ணா தி.மு. கழகத்தைதுவக்கினார் அந்த இயக்கம் இன்று வரைதொடர்ந்துசெயலாற்றி வருகிறது.

1972ம் ஆண்டு புரட்சித் தலைவரை கருணாநிதி கட்சியைவிட்டுவெளியேற்றியவுடன் லட்சக்கணக்கான மக்கள் புரட்சித் தலைவருக்கு ஆதரவுகொடுத்தார்கள்.

ராமன் இருக்கும் இடம் தான் அயோத்தி என்று கூறுவது போல் புரட்சித் தலைவர் இருக்கும் இடம் தான் அண்ணா இருக்கும் இடமாகக் கருதி பெரும்பாலான கட்சி தொண்டர்களும்புரட்சித்தலைவர்பக்கம் வந்து சேர்ந்தார்கள்.

### எண்ணம் ஈடேறவில்லை

கட்சி ஆரம்பித்த ஐந்தே ஆண்டில் ஆட்சியையும்பிடித்தார் புரட்சித்தலைவர் இதை கருணாநிதியால் தாங்கிக் கொள்ள முடியவில்லை இன்னும் எத்தனை நாட்களுக்கு இந்த ஆட்சி. இன்று கவிழும்நாளைகவிழும் என்று கெடுவைத்து பார்த்தார் பாவம் அவர் எண்ணம் ஈடேறவில்லைஅவர்எண்ணத்திற்கு மாறாகத் தான் இன்று வரை கழகம் செயல்பட்டு வருகிறது.

இது வரை தமிழகத்தில் 9 ஆண்டுகளுக்கு மேல் யாரும் முதல் அமைச்சராக இருந்தது. கிடையாது 9 ஆண்டுகள் முதல் அமைச்சராக இருந்தவர் காமராஜ் ஒருவர்தான் அதன் பிறகு 11 ஆண்டுகள் முதலமைச்சராக இருப்பவர் புரட்சித்தலைவர் தான் என்பதை நாடே அறியும் இன்னும் நான் ஒன்றை கூறுகிறேன் அனைத்திந்திய அண்ணா தி மு கழகம் என்பது புரட்சித்தலைவர் தான் அதைபோல் புரட்சித் தலைவர் இருக்கும் வரை அவர் தான் முதலமைச்சர் ஆட்சியில் இருப்பவர்களின் கட்சியின் செல்வாக்கு ஆண்டுக்கு ஆண்டு குறையும் என்பார்கள் ஆனால் கழக ஆட்சியின் செல்வாக்கு ஆண்டிற்கு ஆண்டு வளர்கிறது.

அதற்கு காரணம் புரட்சித் தலைவர் ஏழை எளிய மக்களுக்காக திட்டமிட்டு செயலாற்றுவது தான்.

40 வருடங்களாக ஏழை மக்களுக்குக் கிடைக்காத அடிப்படை வசதிகள் புரட்சித்தலைவர் ஆட்சியில் தான் கிடைக்கிறது. இது போல் வசதிகள் இதுவரை எந்த ஆட்சியிலும் கிடைத்ததில்லை. அதனால் தான் புரட்சித்தலைவரின் ஆட்சி நாளுக்குநாள் செல்வாக்கடைந்து வருகிறது.

அறிஞர் அண்ணா இந்தியாவில் ஒரு தமிழ் நாட்டை ஏற்படுத்தினார் புரட்சித் தலைவர் இலங்கையில் ஓர் தமிழ்நாட்டை ஏற்படுத்தினார்.

### இலங்கை நிலவரம்

இலங்கையில் இன்று துரதிர்ஷ்டவசமான நிலை ஏற்பட்டிருக்கிறது இந்த ஒப்பந்தத்தை பாரத பிரதமர் புரட்சித்தலைவரின் உதவியோடு ஏற்படுத்தினார் அந்த ஒப்பந்தத்தை நிறைவேற்ற முடியாமல்இன்றுசிலசம்பவங்கள் நடந்து வருகிறது.

இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்தி கருணாநிதி தான் இழந்த செல்வாக்கை மீண்டும் அடைய துடிதுடித்து பிரபாகரனுக்காகவும் கிட்டுவிற்காகவும் முதலைக் கண்ணீர் வடிகிறார்,

கருணாநிதி ஆட்சியில் இருந்தபோது குட்டிமணியை பிடித்தது இலங்கை அரசிடம் ஒப்படைத்தார் குட்டிமணி சித்திரவதை செய்து கொல்லப்பட்டார்.

'உங்கள் நாட்டில் உள்ள எங்கள்நாட்டு பயங்கரவாதியை பிடித்து உடனே எங்களிடம் ஒப்படையுங்கள் என்று இலங்கை அரசு மத்திய அரசிற்கு ஓர் கடிதம் எழுதியது. மத்திய அரசு அந்த கடிதத்தை தமிழ்நாடு அரசிற்கு அனுப்பி வைத்தது அவ்வளவு தான் உடனே அப்பொழுதுமுதல்வராக இருந்த கருணாநிதி உடனே குட்டிமணியைப் பிடித்து இலங்கை அரசிடம் ஒப்படைத்த வரலாற்றை மறந்திருக்கமாட்டீர்கள்.

நமது புரட்சித்தலைவர் விடுதலைப்புலிகளுக்கு இங்கே வீடுகள் கொடுத்தார் முதலில் 4கோடி ரூபாயும் பிறகு 4 கோடி ரூபாயும் ஆக எட்டு கோடி ரூபாய் கொடுத்தார இது போல் வேறு எத்தனையோ உதவிகள் செய்தவர் தான் நமதுபுரட்சித்தலைவர்.

கருணாநிதியோ விடுதலை புலிகளுக்காக தமிழகத்தில் லட்சம் லட்சமாக வசூல் செய்தார் விடுதலைப்புலிகளின் அமைப்பிற்கு இந்தா நீ 10 ஆயிரம் வைத்துக்கொள் நீ 25 ஆயிரம் வைத்துக் கொள் என்று கொடுத்தார் அதை பிரபாகரன் வாங்க மறுத்துவிட்டார்.

### முதலைக் கண்ணீர்

அதன்பிறகு கருணாநிதி இலங்கை போராளிகள்மீது வெறுப்படைந்து, தான் தலைவனாக இருந்த டெசோ இயக்கத்தையே கலைத்து விட்டார் அவர் தான் இன்று கிட்டுவிற்காக முதலைக் கண்ணீர்வடிக்கிறார்.

கிட்டு, புரட்சித்தலைவர் அமெரிக்கா போவதற்கு முன் புரட்சித் தலைவரை ஜூலை மாதம் தமிழ்நாடு அரசு அலுவலகத்தில் வந்து பார்த்தார் கிட்டுவை பார்த்து புரட்சித்தலைவர் அவர் இழந்த காலுக்கு பதில் செயற்கை காலை பொருத்துவதற்கு ஏற்பாடு செய்து அந்த செலவையும் அவரே ஏற்றார்.

கிட்டுவை அவருடைய பாதுகாப்பிற்காக வீட்டிற்குள்ளேயே வைத்து பாதுகாப்பு கொடுத்திருக்கிறோம் அவருக்கு போலீஸ் அதிகாரிகளை பாதுகாப்புக்காக கொடுத்திருக்கிறோம் அவரை பார்க்கப்போவதாக கூறிக் கொண்டு அங்கிருந்த போலீசாரிடம் கோபால்சாமி எம். பி. போன்றவர்கள் பிரச்சினை உண்டாக்கியதால் தான் அவர்கள் கைது செய்யப்பட்டார்கள்.

இன்றைக்கு நடக்கும் துரதிர்ஷ்டமான சம்பவங்களை உடனேநிறுத்துவதற்கு மத்திய அரசு நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று அமெரிக்காவில் இருந்து கனடாவில் இருக்கும் பாரத பிரதமருக்குக் கடிதம் எழுதி இருக்கிறார்புரட்சித்தலைவர்

அங்கே அமைதிஏற்பட வேண்டுமானால் விடுதலை புலிகள் உடனடியாக தங்கள் ஆயுதங்களைஅமைதி படையிடம் ஒப்படைத்து விட்டு பேச்சுவார்த்தை நடத்த தயாராக வேண்டும் அதே போல் மத்திய அரசும் சண்டையை நிறுத்தி விட்டு ஒப்பந்தத்தை நிறைவேற்ற முன் வர வேண்டும் இரண்டு பக்கமும் வறட்டு கவுரவத்தை பார்க்காமல் செயல்பட வேண்டும்.

ஒப்பந்தத்தை நிறைவேற்றினால் தடுப்பதற்கு இரு தரப்புமேகாரணமாக இருக்கிறது.

இரு தரப்பையும் கேட்டுக் கொள்ளுகிறோம் இருதரப்பிலும் கவுரவம் பார்க்காமல் சண்டையை நிறுத்தி பேச்சு நடத்துங்கள் என்று.

இந்தியபடை மனது வைத்தால் ஒருமணி நேரத்தில் விடுதலைப்புலிகளை பிடித்து தி.மு.யும் விடுதலைப்புலிகள் – யிருக்கும் பொது மக்கள் உயிரக்கும் சேதம் ஏற்படக்கூடாதென்பதற்காகத்தான் இந்திய அமைதிப் படையினர் ஜாக்கிரதையாக செயல்படுகிறார்கள் ஆகையால்தான் தமிழ் நாட்டில் எதிர்க்கட்சிகளால் நடத்தப்பட்ட 6 மணி நேரபந்தில் கழகமும்கலந்து கொண்டது.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு பேசினார்.

கூட்டத்திற்கு கரூர் சட்டமன்ற உறுப்பினர் வடிவேல் தலைமை தாங்கினார். கூட்டத்தில் முன்னாள் அமைச்சர் நல்லுசாமி, இளவரசன், ரத்தினவேல், பாளை திருநாவுக்கரசு, பெருமாள் சட்டமன்ற உறுப்பினர்சரோஜாநாடாளுமன்ற உறுப்பினர் தங்கராஜ் மற்றும்பன்னீர்செல்வம்சட்டமன்றஉறுப்பினர்புருஷோத்தமன் தில்லை சுப்பையா ஹரிகிருஷ்ணன் ஆகியோர் கலந்துக் கொண்டார்கள்.



# அசோக்நகர் பெண்கள் பள்ளி: புரட்சிதலைவர் வாழ்த்து செய்தி

சென்னை, அக், 23, சென்னை அசோக் நகர் அரசினர் பெண்கள் மேல் நிலைப்பள்ளியின் வெள்ளி விழாராணிஅண்ணாதிருமண மண்டபத்தில் சிறப்பாகநடந்தது. தமிழ் வளர்ச்சி உயர் மட்டக்குழுத் தலைவர் டாக்டர் ம.பொ.சி- தலைமை வகித்தார் மாவட்ட முதன்மைக் கல்வி அதிகாரி எர்ஸ்கின் தேவா சீர்வாதம் அனைவரையும் வரவேற்றார் தலைமை ஆசிரியை சௌமினி வித்யாதரன் அறிக்கை வாசித்தார்.

ஜனாதிபதி வெங்கட்ராமன் பிரதமர் ராஜீவ் காந்தி அமெரிக்காவிலிருந்து முதல்வர் புரட்சித் தலைவர் ஆகியோர் அனுப்பிய வாழ்த்துச் செய்திகளைதுணை தலைமை ஆசிரியை விஜயலட்சுமி படித்தார்.

பள்ளிக்கட்டிட நிதிக்காக 50 ஆயிரம் ரூபாய்க்கான காசோலையைதொழிலதிபர் ஆர். வீரமணி வழங்கினார். சட்டமன்ற உறுப்பினர்கள் சைதை துரைசாமி டாக்டர் சவுரிராஜன் ஆகியோர் பங்கேற்று முன்னாள் தலைமை ஆசிரியர்களுக்கும் மாணவிகளுக்கும்பரிசுவழங்கி பாராட்டிப் பேசினர்,

வெள்ளிவிழா மலரை தமிழக ஆளுநர் வெளியிட்டார்

வெள்ளிவிழா அரங்கத்தை திறந்து வைக்கும் வகையில் ஆளுநர்குரானாகுத்துவிளக்கு ஏற்றி வைத்து சிறப்புரை ஆற்றினார்.

# தி. மு. க. கூட்டிய கூட்டத்து தமாஷ்கள்

ஈழத் தமிழர்களைக் காப்பாற்ற மாபெரும் பொதுக்கூட்டம் என்று கருணாநிதி ஒரு கூட்டத்தைகூட்டினார்.

டெல்லியிலிருந்து லோக்தளத் தலைவர் அஜித்சிங், அந்தக் கட்சியின் பொதுச்செயலாளர் சுப்பிரமணியசுவாமி, ஆகியோரும் ஆந்திர முதல்வர் என். டி. ராமராவ். தெலுங்கு தேசக்கட்சி பொதுச்செயலாளர் உபேந்திராவும் வந்திருந்தனர்.

கருணாநிதியும் ராமராவும் ஒரே காரில் கலைவாணர் அரங்கத்திற்கு வந்தனர். கூட்டத்தினரைப் பார்த்து கையை ஆட்டிக்கொண்டே கருணாநிதி வந்தார். யாரும் சட்டைசெய்யவில்லை. என். டி. ஆரைப்பார்த்து மட்டும்''என்.டி ஆர்., என்.டி.ஆர்.' என்று கூச்சலிட்டனர்.

ஆரம்பமே கருணாநிதிக்கு அபசகுணம் கருணாநிதியின் ஆட்கள் மட்டும் "ஒட்டுமொத்த தமிழர்களின் தலைவர் கலைஞர்'' என்று மைக் முன் பேசும் போதெல்லாம் சொன்னார்கள்.

வடமாநிலத் தலைவர்கள் எவரும் கருணாநிதியை தமிழினத்தலைவராக கருதவில்லை.

**கருணாநிதி பேசும் போது ஐந்து கோடி தமிழ்மக்கள் சார்பாகச் சொல்கிறேன். இனியும் பொறுத்துக் கொண்டு இருக்க முடியாது என்று குறிப்பிட்டார்.**

பிறகு அவரேசுருதிஇறங்கி 'ஐந்து கோடி மக்களுக்கு நான் தலைவன் அல்ல. ஐந்து கோடி மக்களால்ஏற்றுகொள்ளப்பட்டவன் அல்ல' என்று குறிப்பிட்டபோது கூட்டத்தில் சிரிப்பு அலை எழுந்தது.

கூட்டத்திற்கு வந்தவர்களில் ஒரு முன்னூறுபேர் தி.மு க. வினர் மிச்சமுள்ள சில நூறு பேர்கள் எந்தக்கட்சியையும் சாராதவர்கள். என்.டி. ராமாராவ், அஜீத்சிங் ஆகியோரின் பேச்சை கேட்க வந்தவர்கள்.

**உபேந்திரா பேசும் போது இலங்கைதமிழர் பிரச்சினையை வைத்துக்கொண்டு பிரதமர் ராஜீவ்காந்தியை தனிப்பட்ட முறையில் தாக்கிபேசுவதிலேயே குறியாக இருந்தார்.**

**இலங்கையுடன் ஏற்பட்ட உடன்பாட்டில் விடுதலை இயக்கங்கள்தான்கையெழுத்திட்டிருக்கவேண்டும். இந்தியா சாட்சியாகத்தான் இருந்திருக்கவேண்டும் என்றார் உபேந்திரா.**

அவரது அற்புதமான ஆங்கிலப்பேச்சை வை. கோபால்சாமி எம். பி, மொழி பெயர்த்தார். மொழிபெயர்ப்பைக் கேட்டவர்களுக்கு உபேந்திரா மீதிருந்த மதிப்பு-மரியாதையே போய் இருக்கும்! அத்தனை அபத்தமான மொழிபெயர்ப்பு. It is not a hour of glory என்று உபேந்திரா சொன்னதை வை. கோபால்சாமி மொழி பெயர்த்த விதம்கூட அப்பட்டமான தவறாக இருந்தது.

அஜீத்சிங் பேச்சையும் கோபால்சாமிதான் மொழி பெயர்த்து குதறித் தள்ளினார். அமெரிக்க பட்டதாரியான அஜீத்சிங்கின் ஆங்கிலம் கோபால்சாமிக்கு புரியவே இல்லை.

**உடன்படிக்கையை மீறிவிட்டதாக விடுதலைப் புலிகளை மட்டும் கூற முடியாது. இலங்கையையும் குற்றம் கூறவேண்டும். உடன்படிக்கையை நாடாளு மன்றத்தில் வைத்து அங்கீகரிக்க (Ratification) தவறிவிட்டது. இலங்கை தோட்ட தொழிலாளர்களாகிய தமிழர்களுக்கு உடன்பாட்டின்படி பிரஜாஉரிமை வழங்காமல் இருக்கிறது இலங்கை என்றும் அஜீத் சிங் குற்றம் சாட்டினார்,**

**என்.டி. ராமராவ். தனக்கே உரித்த அரசியல் பாணியில் மத்தியஅரசை குறை கூறினார்**

**கடமை, கண்ணியம், கட்டுப்பாடுஎன்று-அண்ணா கூறினார்.**

"இங்கு நான் கூறுவது கட்டுப்பாட்டுடன் கட்டுப்படு இல்லையேல் எல்லையில்லை நம் தொல்லைகளுக்கு' என்று விடுதலை புலிகளுக்கு உருக்கமாக வேண்டுகோள் விடுத்தார். என்.டி.ஆர்.

தமிழ்ப்புலிகள் தாமாக விருப்பப்பட்டு பேச்சுவார்த்தைக்கு வர விழைய வேண்டும்-வர வேண்டும். இந்திய அரசும் இந்த வட்டத்தில் நின்று சமரசம் காணவேண்டும் என்றார் ராமராவ்.

**அப்போது கருணாநிதியின் முகம் - முன்னிலும் கறுத்துப் போயிற்று!**

விடுதலைப்புலிகளுக்கு இப்படி ஒரு வேண்டுகோளா? அதிர்ந்து போனார் ஆரூர் சோழன்!

**தமிழ் வாசகங்களை தெலுங்கில் எழுதி வைத்து வாசித்தார் என். டி. ஆர்.**

கூட்டத்தில் பேசிய எவரும் தி.மு.க.வின் ரயில் நிறுத்தப்போராட்டம் பற்றி பேசவில்லை. கருணாநிதியேகூட, தான் அறிவித்த ரயில் நிறுத்த போராட்டம் பற்றி பேசவில்லை.

# கஞ்சாவிற்ற பெண்: ஆறு மாதம் சிறை

சென்னை, அக். 23- சென்னை ஜார்ஜ் டவுன் பகுதியில் கஞ்சா விற்ற மரகதம் (வயது 50) என்ற பெண்ணுக்கு 6 மாத சிறைத் தண்டனையும் 500 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது.

போதை பொருள் தடுப்பு துணை போலீஸ் சூப்பிரண்ட் பழனிச்சாமி உத்தரவின் பேரில் இன்ஸ்பெக்டர் லட்சுமிநாதன் மரகதத்தை கைது செய்தார் ஜார்ஜ் டவுன் 16 வது கோர்ட்டில் மரகதத்திற்கு 6 மாதம் சிறைத் தண்டனையும் ரூபாய் 500 அபராதமும் விதிக்கப்பட்டது அபராதம் கட்டத் தவறினால் மேலும் 3 மாதம் சிறை தண்டனை அனுபவிக்க வேண்டும்.

# "குழப்ப வார்ப்புகள்"

1977-லிருந்து தமிழ்நாட்டு
ஆட்சிப் பொறுப்பை மக்கள்
வணக்கத்திற்குரிய இதய தெய்வம்
டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களிடம்
ஒப்படைத்துள்ளனர்,
கருணாநிதி ஆண்ட போதிலிருந்தே
உள்ளாட்சித் தேர்தல்கள் பல்வேறு
காரணங்களால் நடத்தப்படாமல்
இருந்து வந்ததை நாடறியும்
ஆனாலும்
தமிழ்நாட்டில் முப்பது ஆண்டு காலத்தில்
உள்ளாட்சி நிறுவனங்களின்
சொத்து மதிப்பு ஐம்பது கோடியைக் கூட
எட்டவில்லை, ஆனால்
புரட்சித்தலைவர் அரசு
உள்ளாட்சி தேர்தல் நடப்பதற்
முன்பாகவே-நிர்வாக அலுவல
தனி அலுவலர்களை வைத்தே
உள்ளாட்சியை நடத்தி வந்த நேரத்திலேயே
மூன்று நூறு கோடி ரூபாய்களுக்கு
மேலாக சொத்து மதிப்பை உயர்த்தி
புதிய வரிகளை புகுத்தாமலேயே
உள்ளாட்சி நிர்வாகத்தை திறம்பட மக்களுக்கு
உள்ளாட்சித்துறை
தலைவர்கள் இல்லை
என்ற குறை தெரியாமலேயே
நாட்டுமக்களின் எதிர்பார்ப்பை
நிறைவேற்றி வந்திருக்கிறார்
பொதுவாக ஐந்து ஆண்டுகளுக்கு
ஒருமுறை ஆங்காங்குள்ள
மக்களின் தேவைகளை கருத்தில் கொண்டு
உள்ளாட்சி நிர்வாகத்தின் நடைமுறை
வரவு - செலவிற்கேற்ப
வரிகளை உயர்த்துவது-சீர்செய்வது
ஒழுங்குபடுத்துவது என்பதெல்லாம்
நகராட்சி நிர்வாகத்திற்கு
அளித்துள்ள உரிமையாகும்
ஆனால் உள்ளாட்சி நிர்வாகத்திற்கு
தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் இல்லாததால்
நிர்வாக அலுவலர்
தனி அலுவலர்-என்பவர்கள்
கையிலிருந்ததால்-தமிழ்நாடு அரசு
அதிகாரிகள் மக்கள் நிலையறியாமல்
வரிவிதித்து விடுவார்களோ என்றெண்ணி
வரி உயர்வு செய்யாமலேயே
வசதிகளை செய்துகொடுத்துக்கொண்டு வந்தது.
உள்ளாட்சி தேர்தல் நடப்பதற்கு முன்பாக
சட்டமன்றத்தில் சுமார் பத்தாண்டு காலத்திற்கு
மேலாக
வரி உயர்வு செய்யாது
உள்ளாட்சி நிர்வாகம் இயங்கி வருவதால்
மேலும் மக்களின் அத்தியாவசிய தேவைகளை
முழுமையாக நிறைவேற்றும் எண்ணத்தில்
சட்டமன்றத்தால்
தேவையான வரி விதிக்க
தீர்மானிக்கப்பட்டது-ஆனால்
உள்ளாட்சிகளில்
பொறுப்பேற்றவர்கள்
பொறுப்பற்ற முறையில் பேசியும்
எழுதியும் பொதுமக்களிடத்தில்
"கொச்சைப்படுத்தினதால்" அதனை
புரட்சித்தலைவர் அவர்கள்
1-4-87-ல் ரத்து செய்துவிட்டார்
தேர்ந்தெடுக்கப்பட்ட
நகராட்சிகள் பல
வறட்சி நிலையை மனதில்கொண்டு
வரி உயர்த்தவில்லை
சில நகராட்சிகள்
வரிகளை ஆங்காங்குள்ள
நிலைமைகளுக்கேற்ப .
உயர்த்தியுள்ளன.
கருணாநிதியும்-அவரது
ரஜகத துரக பதாதிகளும்
ஓர் தனி சாம்ராஜ்யத்தை நடத்த
திட்டமிட்டனர்
பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம்
இந்தியாவிற்கு சுதந்திரம்
வழங்கும்போது
ஐந்து நூறுக்கும் மேற்பட்ட
சமஸ்தானங்களுக்கும்-தனி
சுதந்திரம் கொடுத்து
சுதந்திர இந்தியாவில் ஓர்
போர்க்களம் - ரணகளம் காண
துடிதுடித்துக் கொண்டிருந்ததைப் போல
தமிழ் நாட்டில்
கருணாநிதி கட்சிக்காரர்களால்
தமிழக அரசுக்கும்
உள்ளாட்சி நிர்வாகத்திற்கும்
ஓர் போர் மூட்டத்தை உருவாக்க
தீதான எண்ணத்தில்
திட்டம் தீட்டினர்
இதையறிந்த புரட்சித்தலைவர் அரசு
25-5-87-ல் ஓர் அரசாணையை பிறப்பித்தது.
அதன்படி
மூன்று திட்டங்கள் அமலுக்கு வந்தன
ஒன்று-
ஆண்டுக்கு ஆண்டு மழையளவு
குறைந்து வருவதைக் கண்டும்
சுற்றுச் சார்பு சூழலை பாதுகாக்கவும்
"வீடுகள் தோறும் மரம் வளர்த்தல்"
இரண்டு
நகராட்சி நிர்வாகம் வரி விதித்தால்-அது
மக்களுக்கு திருப்தியளிக்க வில்லையானால்
மேல் முறையீடு செய்து கொள்ள
மாவட்ட வருவாய்த்துறை அலுவலர் (DRO)
அல்லது
வருவாய் கோட்ட அலுவலர் (RDO)
நகராட்சித்தலைவர்
நகராட்சி உறுப்பினர்கள் இருவர்
நிர்வாகப் பொறியாளர் (PWD)
ஆகிய ஐந்து பேர் கொண்டகுழுவிற்கு
அனுப்பிவைக்கலாம் என்றும்
இதிலே அரசு அதிகாரிகள் இருவர்.
மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் மூவர்
இருப்பது குறிப்பிடத்தக்கது,

டாக்டர்
**கோ. சமரசம்**
செயலாளர்,
அனைத்துலக
எம். ஜி ஆர் மன்றம்

மூன்றாவதாக
மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்
மக்கள் விரோதிகளாக செயல்பட்டால்
இயங்காமல் முடமானால்
நிர்வாகச் சீர்கேடு நடந்தால்
அதிகார துஷ்பிரயோகம் செய்தால்
மக்களின் அன்றாட தேவை
தடுக்கப்பட்டால்
நிர்வாகத்தை நடத்தமுடியாமல்
செயலிழந்து போனால்,
அதிகாரிகளை தமது கடமையை
செய்யவிடாத நிலையை உருவாக்கினால்
"கஜானாவை?' காலிசெய்து
திவாலாகி விட்டால்
அத்தகைய அமைப்பை கலைத்துவிடும்
அதிகாரத்தை அரசு நடைமுறைப் படுத்த
வழிவகை செய்கிறது.
மற்றபடி புரட்சித்தலைவர்
அரசு வரி விதிக்கவுமில்லை
தடுக்கவுமில்லை
உள்ளாட்சி துறை என்பதே
"தன்னாட்சி" முறையாகும்.
வரிவிதிக்கவும்- நீக்கவும்
அதற்கே முழுஉரிமையுண்டு
சுயதேவையை பூர்த்தி செய்துகொள்ள
நகராட்சிகளுக்கு பூரண சுதந்திரம் உண்டு.
ஆனால் கருணாநிதியோ-
"வரவில்லாமல் செலவு செய்ய"
"ஊரார் பணத்தில் ஊர்வலம் வர"
"கடைத் தேங்காயை எடுத்து
வழிப் பிள்ளை யார்க்கு உடைக்க"
"மாமியாருடையதை மருமகளுக்கு
தாரை வார்க்க"
"ஊரான் வீட்டு நெய்யே
என் பெண்டாட்டி கையே"
என்ற ஊர் பழ மொழிகளுக்கெல்லாம்
உதாரணமாக
இராமாயணக் கூனியும்
பாரத சகுனியும்
கலந்து உருவான வார்ப்படமாக திகழுகிறார்.
தர்மத் தேவன் ஆனாலும்
ராமராஜ்ஜியத்திற்கு
களங்கம் ஏற்படுத்த
திட்டமிட்டு
தீயவிதைகளை தமிழகத்தில்
விதைத்து வருகிறார்
பதவிவெறி தலைக்கேறி
வாங்காத கப்பலுக்கு
வாங்கியது நாலரை கோடி ஊழல் என்றும்
"இல்லாத ஒருவருக்கு
எதற்காக ஓட்டு?
உங்களோடு இருக்கும்
எனக்கே ஓட்டு போடுங்கள் என்றும்,'
"தற்காலிகமாக என்னை முதல்வராக்குங்கள்
தமிழகத்திற்கு எம். ஜி. ஆர். வரும்போது
பத்திரமாக முதலமைச்சர் பொறுப்பை
அவரிடம் ஒப்படைத்து விடுகிறேன்"
என்றும்
"பைத்தியத்தின் முழுத்தன்மை பெற்று
புலம்புகின்ற
காலக் காற்றில் பறக்கும் பதரினைப் பார்த்து
பரிதாபப் படுகிறோம்,

## தஞ்சை மாவட்டத்தில் இலவச கண் சிகிச்சை

தஞ்சை, அக், 23-
பட்டுக்கோட்டை அளவிலான அரசு இலவச கண் சிகிச்சைமுகாம்இரண்டாம் கட்டமாக பட்டுக் கோட்டை அரசு ஆண்கள் மேல் நிலைப் பள்ளியில் 26-10-87 முதல் 2-11-87 முடியநடத்த திட்டமிடப்பட்டுள்ளது.

முன் பரிசோதனை நாள். 26-ந்தேதி அனுமதி நாள். 27-ந் தேதி அறுவை சிகிச்சை நாள். 28 ந் தேதி அறுவை சிகிச்சை செய்து கொண்டநபர்களை விடுவிக்கும் நாள் நவம்பர் 2ந் தேதியாகும்.

# இந்திய அமைதிப்படை நடவடிக்கைக்கு போராளிகள் பாராட்டு

சென்னை, அக். 23-
விடுதலைப்புலிகள் தாங்களாகவே ஆயுதங்களை ஒப்படைக்காவிட்டால் அவர்களிடம் உள்ள ஆயுதங்கள் அனைத்தையம் இந்திய அமைதிப்படையினர் பறிமுதல் செய்ய வேண்டும் என போராளிகளின்கூட்டமைப்பு கேட்டுக் கொண்டுள்ளது.

ஈழ தேசிய ஜனநாயக விடுதலை முன்னணியின்பொதுச் செயலாளர் பி. ராஜன் நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:-

விடுதலைப் புலிகள் தங்கள் வசம் உள்ள ஆயுதங்களை ஒப்படைக்க வேண்டும். அப்படி இல்லாவிட்டால் இந்திய அமைதிப்படையினர் அவர்களிடம் உள்ள ஆயுதங்களை பறிமுதல் செய்யவேண்டும்.

விடுதலைப்புலிகள் கோடிக் கணக்கானரூபாய்க்கு ஆயுதங்களை வாங்கிக் குவித்துள்ளனர்.

அவர்களிடம் ஆயுதங்கள் உள்ளவரை மற்ற போராளிகளுக்குப் பாதுகாப்புஇல்லை

யாழ்ப்பாணத்தின் வடக்கு கிழக்குப் பகுதிகளில் அமைதி ஏற்படுத்தி இந்தியஅமைதிப் படையினரோடு ஒத்துழைப்பு தருவோம்.

இவ்வாறுராஜன்கூறினார்.

# ஈழத்தமிழ் மக்களுக்கு வீடுகட்டிக் கொடுக்கிறது இந்திய ராணுவம்

கொழும்பு, அக் 23-
இலங்கையில் பாதிக்கப்பட்ட தமிழ் மக்களுக்கு இந்தியராணுவம் உலக வங்கி உதவியுடன் வீடுகள் கட்டிக்கொடுக்க முன் வந்துள்ளது,

இந்திய-இலங்கை ஒப்பந்தத்தை தொடர்ந்து இந்திய அமைதிப்படையினர் தமிழர்களுக்கு பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளனர்.

தமிழ் ஈழ போராளிகள் ஒப்பந்தத்தை சீர்குலைத்து வருகிறார்கள்.

ஒப்பந்தப்படி தங்களிடம் உள்ளஆயுதங்களை அமைதிப் படையினரிடம் ஒப்புவிக்காமல் அமைதிப் படையினர் மீதுபயங்கரதாக்குதல்நடத்தி வருகிறார்கள்.

யாழ்ப்பாணம் மற்றும் அதைச்சுற்றியுள்ளப் பகுதிகளில் அமைதிப்படையினருக்கும் தமிழ் ஈழ போராளிகளுக்கும் இடையே சண்டை நடக்கிறது.

யாழ்ப்பாணத்தின் முக்கிய பகுதிகளை அமைதிப்படையினர் தம் வசம் கொண்டு வந்து விட்டனர் மருத்துவமனை ரெயில் நிலையம் பேருந்து நிலையங்கள் மார்க்கெட்டுகள் முதலியவற்றை அமைதிப்படையினர் தங்களுடைய கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து விட்டனர்.

யாழ்ப்பாணத்தில் உள்ள இந்திய கப்பல் படையினரும் நடவடிக்கைகளை மேற்கொள்ள துவக்கிவிட்டனர். யாழ்ப்பாணம்கோவிலில்தங்கியுள்ள தமிழர்களுக்கு அமைதிப்படையினர் ஹெலிகாப்டர் விமானங்கள் உணவுப் பொட்டலங்களை வினியோகம் செய்தனர்.

உணவுப் பொட்டலங்களை போடும் ஹெலிகாப்டர் விமானங்கள் மீது தமிழ் போராளிகள் குண்டு வீசி தாக்கியதாக செய்திகள் தெரிவிக்கின்றன. தாக்குதலால் பாதிக்கப்பட்ட தமிழ் மக்களுக்கு பல்வேறு வகைகளிலும் இந்திய ராணுவம் உதவி அளித்து வருகிறது.

காயமடைந்தவர்கள் வியாதிக்குப்பட்டவர்கள் அனைவருக்கும் மருத்துவ உதவி அளிப்பதில் ராணுவம் ஈடுபட்டுள்ளது.

ராணுவத்தைச் சேர்ந்த மருத்துவக்குழு ஒன்றும் நேற்று யாழ்ப்பாணத்துக்கு அனுப்பப்பட்டது. யாழ்ப்பாண மருத்துவமனையிலும் ராணுவ மருத்துவர்கள் சிகிச்சை அளிக்கிறார்கள்.

யாழ்ப்பாண நகரத்துக்கு மின்சார சப்ளையும் வழங்கப்பட்டது.

இலங்கையில் பாதிக்கப்பட்ட தமிழர்களுக்கு உலக வங்கி உதவியுடன் இந்திய ராணுவம் வீடுகள் கட்டிக் கொடுக்கிறது. மற்றும் சாலைபோக்குவரத்துபள்ளிக்கூட கட்டிடங்கள் மருத்துவமனை இல்லங்கள் முதலிய வசதிகளையும் இந்திய ராணுவம்செய்துதரும்.

## கோவை கருப்புசாமி தாயகம் திரும்பினார்

கோவை, அக். 23:
கோவை மாவட்ட அண்ணா பஞ்சாலை தொழிற்சங்க பொதுச் செயலாளர்கோவை நா. கருப்புசாமி இங்கிலாந்து, ஹாலந்து, இத்தாலி, ஜெர்மனி, பிரான்சு, உள்பட பல்வேறு நாடுகளுக்கு சுற்றுப் பயணம் சென்று விட்டு கோவை வந்தார்,

கோவை சூலூர் விமான நிலையத்தில் கழகத்தவர்கள் சார்பில் மிகவும் சிறப்பான முறையில் வரவேற்பளிக்கப் பட்டது.



சென்னை மயிலாப்பூரில் நடந்த கழக 16வது ஆண்டு துவக்கவிழா கூட்டத்தில் பகுதி செயலாளர் எம்.கே,பாலன் முன்னாள் அமைச்சர் ஆர்.எம்.வீக்கு நினைவுப்பரிசு வழங்கினார் படத்தில் சென்னை மாவட்ட கழக செயலாளர் ஜேப்பியார் துணை செயலாளர் கு.க,செல்வம் ஆகியோர் உள்ளனர்.

# புலிகள் - போராளிகள் கடும் மோதல்: 'பிளாட்' வீரரை கொன்றனர்

சென்னை, அக். 23-
'பிளாட்' பிரிவைச்சேர்ந்த போராளி ஒருவரை விடுதலைப்புலிகள் சுற்றி வளைத்து தாக்கி படுகொலை செய்தனர்.

வடக்கு மன்னார் மாவட்டத்தில் மக்கள் விடுதலை முன்னணியைச்சேர்ந்த சுதாகர் வசித்து வந்தார்.

இவர் வீட்டை சுற்றி வளைத்து விடுதலைப்புலிகள் அமைப்பைச் சேர்ந்த 25 பேர் தாக்கினர். இந்த தாக்குதலில் சுதாகர் இறந்தார். அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள்சத்தம்போட்டு விடுதலைப்புலிகளை பிடிக்க முயன்றனர். ஆனால் அவர்கள் தப்பி ஓடிவிட்டனர்.

விடுதலைப் புலிகளின் இத்தகைய வன் செயல்களை அனைவரும் கண்டிக்க வேண்டும் என 'பிளாட்' அமைப்பு கேட்டுக்கொண்டுள்ளது.

### வெளி நாடுகளின் கைப்பாவையாக செயல்படும் விடுதலைப் புலிகள்

'பிளாட்' நிறுவனம் வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்றில் தெரிவித்திருப்பதாவது:-

வெளிநாடுகளில் உள்ளசில பிற்போக்குச் சக்திகளின் கைப்பாவையாக விடுதலைப் புலிகள் செயல்பட்டு வருகிறார்கள்.

விடுதலைப்புலிகளுடைய செயல் ஈழத்தமிழர்களுக்கு மட்டுமல்லாது அனைத்து போராளிகளுக்கும் துரோகம் இழைக்கிறது சில வெளிநாட்டு சக்திகளின் உத்தரவுக்கு இணங்க விடுதலைப் புலிகள் செயல்படுகிறார்கள்.

விடுதலைப் புலிகளின் வன் செயலை தமிழகத்தில் உள்ள கட்சிகள் கடுமையாக கண்டிக்கவேண்டும்.

விடுதலைப் புலிகள் மட்டும் மற்ற போராளிகளில் 300 பேரை கொன்று விட்டனர். இந்திய-இலங்கை ஒப்பந்தத்திற்குப் பின்னரும்கூட இந்த படுகொலைகளை விடுதலை புலிகள் நிறுத்தவில்லை.

இவ்வாறு 'பிளாட்' தெரிவித்துள்ளது.

## பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு கழகத்தவர் உதவி

கோவை,அக்.23-
கோவையில்கடந்தஇரண்டு தினங்களுக்கு முன்பு பலத்த மழை பெய்தது இதனால் கோவை சங்கனூர் பள்ளத்தில் வெள்ளம் புகுந்தது வெள்ளபாதிப்பால் அப்பகுதியில் 1000த்திற்கும் மேற்பட்ட வீடுகள் நாசமாயின தீபாவளியை கொண்டாட வைத்திருந்த புடவை, மற்றும் பொருட்கள் வெள்ளத்தால் அடித்துச்செல்லப்பட்டன.

வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்குகழகத் தோழர்கள் ஆறுதல் கூறினர் பாதிக்கப்பட்டவர்கள் தங்குவதற்கும் உணவு, உடை முதலியவற்றை அவர்கள் வழங்கினர் மாவட்ட ஆட்சித் தலைவர் கோவிந்தன்மற்றும் தனி அதிகாரிகள் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட இடங்களை பார்வையிட்டனர்.

# டெல்லியில் வன்முறை: துப்பாக்கி பறிமுதல்

புதுடெல்லி, அக். 23
டெல்லியில் 11 பேரை சுட்டுக்கொன்று விட்டு தப்பிஓடியதீவிரவாதிகளை போலீசார் தீவிரமாகதேடி வருகின்றனர் கொலைகாரர்கள் பயன் படுத்திய ஸ்கூட்டரும் துப்பாக்கிகளும் போலீசாரிடம் சிக்கின.

டெல்லியில் தெற்கு பகுதியில் உள்ள சித்ரஞ்சன் பூங்கா என்ற இடத்தில் ஸ்கூட்டரில் வந்த சீக்கிய தீவிரவாதிகள் சுட்டதில் 11 பேர் இறந்தனர் கொலையாளிகள் தப்பி ஓடிவிட்டனர். அவர்களைபிடிக்க ராணுவம்முடுக்கிவிடப்பட்டுள்ளது.

அதை தொடர்ந்து ராணுவத்தினர் சீக்கிய தீவிரவாதிகளின் வீடுகளில் சோதனையிட்டனர் அதேபோல் காவிலிலும் போலீசார் சோதனை நடத்தி சிலரை கைதுசெய்தனர்.

தப்பிச் சென்ற கொலையாளிகள் ஸ்கூட்டரை கிரேட்டர் கைவாஷ் என்ற இடத்தில் விட்டு விட்டு ஓடிவிட்டனர். அதை போலீசார் கைப்பற்றினர்.

தப்பி ஓடிய தீவிரவாதி ஒருவனை போலீசார் சுட்டுக் கொன்றனர், அவன் பெயர் சுபேதார்சிங் அவனுடன் வந்த 2 பேர் தப்பி ஓடிவிட்டனர்.

மோதலில் இறந்து போன தீவிரவாதியிடமிருந்து 2 துப்பாக்கி மற்றும் வெடி குண்டுகள் கைப்பற்றப்பட்டன. இதைத் தொடர்ந்து டெல்லி முழுவதும் போலீசார் சாலைகளில் செல்லும் வாகனங்களின் வேகத்தை குறைப்பதற்காக தடை ஏற்படுத்தியுள்ளனர்.

தீவிர வாதிகளுடன் நடந்த மோதலில் காயமுற்ற உதவி சப்-இன்ஸ்பெக்டர் அபய்சிங் சப்-இன்ஸ்பெக்டராக பதவி உயர்வு அளிக்கப்பட்டுள்ளது மேலும்அவருக்கு 10 ஆயிரம் ரூபாய் வழங்க போலீஸ் கமிஷனர் மார்வ் உத்தரவிட்டுள்ளார்.

இது தவிர அவருக்குரூபாய் 1 லட்சம் விருது வழங்கவும் மார்வ் மத்திய அரசுக்கு சிபாரிசு செய்துள்ளார்.

## இடி தாக்கி பெண் மரணம்

கடலூர், அக், 23-
தென்ஆற்காடு மாவட்டத்தில் நேற்று பரவலாக மழை பெய்தது,

சிங்கனூர் கிராமத்தில் இடி தாக்கியதில் 30 வயது பெண் ஒருவர் இறந்தார்.

பலத்த காற்று மழையினால் ஆடூர்அகரம்கிராமத்தில் அறுந்து விழுந்த மின்சாரக்கம்பியை மிதித்ததால் 25 வயது வாலிபர் ஒருவர் இறந்தார்.

# எண்ணெய் கிடங்கு மீது குண்டு வீச்சு

பாரெய்ன், அக். 23-
குவைத்நாட்டு எண்ணெய் கிடங்கு மீது ஈரான்நேற்று குண்டுகளை வீசிதாக்குதல் நடத்தியது. எண்ணெய் பிடித்துக் கொண்டிருந்த கப்பல்கள் நாசமானதாகவும் செய்திகள் தெரிவித்தன.

கடந்த 7 ஆண்டுகளாகவே ஈரானும், ஈராக்கும் ஒன்றை ஒன்று தாக்கி போரிட்டு வருகின்றன.

பயங்கர குண்டுகளை வீசி இருநாடுகளும் தாக்கிக் கொள்வதால் உலகநாடுகள் பெரிதும் கவலை தெரிவித்துள்ளன.

வளைகுடாவில்போர் நடப்பதால் மற்ற நாட்டு கப்பல்களும் செல்ல முடியாமல் பாதிப்பு ஏற்பட்டுள்ளது.

இதனால்அமெரிக்கா கண்டனம் தெரிவித்தது. அமெரிக்க கப்பல் ஒன்றும் தாக்கப்பட்டதால்பதிலடியாக அமெரிக்கா ஈரான்கப்பலை தாக்கியது.

அமெரிக்காவின் நடவடிக்கையை ஆதரித்துப் பேசிய குவைத் மீது ஈரான் நேற்று தாக்குதல் நடத்தியது குவைத்து நாட்டு எண்ணெய் கிடங்கு மீது ஈரான் ஏவுகணை வீசி தாக்கியது. ரசாயன குண்டுகளை வீசி நாசகார கிருமிகளை குவைத் மீது தூவியது

வளைகுடாவில் நடக்கும் சண்டையை உடனடியாக நிறுத்தினால் தவிர வளைகுடா நாடுகளுக்கும் அதன் வழியே செல்லும் பிறநாட்டு கப்பல்களுக்கும் பாதுகாப்புஇல்லை என்பதை பல்வேறு நாடுகளும் வலியுறுத்தியுள்ளன.

# ஜெயவர்த்தனேவை கண்டித்து முதல்வர் புரட்சிதலைவர் நடத்திய அறப்போர்கள் பற்றி எஸ்.டி.எஸ்.

தூத்துக்குடி, அக். 23- ஜெயவர்த்தனே அரசைக் கண்டித்து முதல்வர் புரட்சித்தலைவர் நடத்திய அறப்போராட்டங்களை பட்டியல்போட்டுக் காண்பித்தார் முன்னாள் அமைச்சர் எஸ். டி. எஸ். தூத்துக்குடி பொதுக் கூட்டத்தில் எஸ்.டி.எஸ், ஆற்றிய உரையின்தொடர்ச்சிவருமாறு:- 31.5-86 அன்று மீண்டும் தமிழகத்தில்பந்த் நடைபெற்றது. மத்திய அரசும் இந்த 'பந்த்' தில்கலந்துகொண்டது இவற்றை தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் வெற்றிகரமாக நடத்தினார்.

இலங்கை தமிழர் உரிமைகளை காக்க- ஐ.நா மன்றத்தில் குரல் எழுப்ப- இந்திய பிரதமருக்கு - புரட்சித் தலைவர் அவர்கள் டெலக்ஸ் செய்தி அனுப்பினார்.

ஜெயவர்த்தனே வுடைய கொடுமைகளை விளக்கி அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்ற கழகத்தின் சார்பில் 10-8-87 அன்று கண்டனப் பொதும் கூட்டம் தமிழகம் முழுவதுக் நடைபெற்றது.

## கருப்புச்சட்டை அணிதல்

தமிழினம் ஈழத்தில் அழிவதை தரணியெங்கும் அறிவித்திட புரட்சித்தலைவர் கருப்புச்சட்டை அணிந்தார். தம்பிமார்களையும் கருப்புச் சட்டை அணியுமாறு அன்புக் கட்டளையிட்டார்.

இலங்கை ராணுவம் ஈழத் தமிழர்களை ஒன்றும் அறியாத பொதுமக்களை நவீன ஆயுதங்களை கொண்டுதாக்கியது கொன்று குவித்தது அமெரிக்கநாடு சிங்கள ராணுவத்திற்கு ஆயுதங்களை வழங்கியது.

இந்திய ஆயுத உதவியை தடுக்கவேண்டும் அமெரிக்கா சிங்கள ராணுவத்திற்கு ஆயுத உதவி செய்யக்கூடாது என்பதற்காக சென்னை மாநகரத்தைக் குலுக்கிய மாபெரும் பேரணியை 12-10-83 அன்று புரட்சித்தலைவர் நடத்தினார்.

## பொருளாதாரத் தடை

யாழ்ப்பாணத்தில் பொருளாதாரத்தடையைஇலங்கை அரசு விதித்தது இந்தப் பொருளாதாரத்தடை மனிதாபிமானத்திற்கு விரோதமானது உலக மனித உரிமை விதிகளுக்கு விரோதமானது. பொருளாதாரத் தடையை உடனே நீக்க வேண்டும் இல்லாவிட்டால் இந்தியப் பேரரசு நேரடி நடவடிக்கையில் ஈடுபடவேண்டும் என்று நேர்முகமாகவும் கடிதம் மூலமும் தொலைபேசி மூலமாகவும் புரட்சித்தலைவர் பிரதமரை வற்புறுத்தினார்.

இந்தியப் பிரதமரைபுரட்சித் தலைவர் தமது முயற்சியினால் இப்பிரச்சினையில் ஈடுபடவும் செய்தார். இது போன்ற எண்ணற்ற முயற்சிகளை ஈழத்தமிழர்களுக்காக புரட்சித்தலைவர் செய்தார்.

புரட்சித்தலைவருடைய சீரிய முயற்சினால் ஈழத் தமிழர்களுக்கு தனிமாநிலம் ஏற்படுவதற்கு வேண்டிய முயற்சிகள் செய்யப்பட்டது ஆனால்எதிர்பாராதவிதமாக தடங்கல் ஏற்பட்டுள்ளது அந்த தடங்கலை நீக்க வேண்டும்.

நான் தூத்துக்குடிக்கு வந்தவுடன் பலர் என்னைச் சந்தித்தார்கள்' இலங்கை - இந்தியா ஒப்பந்தம் அவசரமாகப் போடப்பட்டது என்றார்கள். இல்லை என்று அவர்களிடத்திலே விளக்கம் சொன்னேன். அதே விளக்கத்தை நாட்டு மக்களுக்கு தெரிவிக்க கடமைப்பட்டிருக்கிறேன் இந்திய இலங்கை ஒப்பந்தம் அவசரமாகப் போடப்பட்டது அல்ல ஆழ்ந்து யோசித்துபல முறை கலந்து உரையாடி பல மாற்றங்கள் செய்து ஏற்பட்ட ஒப்பந்தமாகும்.

## திம்புவில் மாநாடு

1983இல் இருந்து கொழும்பில் பலமுறை வட்டமேசை மாநாடு கூட்டப்பட்டது. ஈழத்தமிழர்கள் சார்பிலும் சிங்களவர்கள் சார்பிலும் இலங்கை அரசு சார்பிலும் பிரதிநிதிகள் இந்த வட்டமேசை மாநாட்டில் கலந்து கொண்டு கருத்துக்களை பரிமாறிக் கொண்டனர்.

நேப்பாள நாட்டில் உள்ள திம்பு நகரில் ஈழத்தமிழர் பற்றி பல முறை மாநாடு கூட்டப்பட்டது.

திம்புவில் நடைபெற்ற மாநாட்டில் இந்திய பிரதமர் சார்பில் இந்திய பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள் இந்திய பிரதிநிதிகள் முன்னிலையில் ஈழப் போராளிகளும்இலங்கைபிரதிநிதிகளும் கலந்து உரையாடல் நடத்தினார்கள்.

தெற்கு ஆசிய நாடுகளின் மாநாடு பெங்களூரில் நடைபெற்றது பல நாடுகளின் பிரதமர்களும் அதிபர்களும் இந்த மாநாட்டில் கலந்து கொண்டார்கள் இலங்கை அதிபர் ஜெயவர்த்தனே இந்த மாநாட்டில் கலந்து கொண்டார். இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்தி மற்ற அலுவல்களுக்கு இடையே இலங்கை பிரச்சினை பற்றி பேசுவதற்கு சந்தர்ப்பத்தை புரட்சித்தலைவர் உருவாக்கினார்.

இப்படிபலமுறை ஈழத்தமிழர் பிரச்சினை பற்றி பேசப்பட்டது. எனவே ஒப்பந்தம் அவசரமாக செய்தது அல்ல.

## தனித்தமிழ் மாநிலம்

ஒவ்வொரு பேச்சுவார்த்தையிலும் ஈழத்தமிழர்களுக்கு தனிமாநிலம் அமைய வேண்டும். அந்த மாநிலத்திற்கு உள்ள அதிகாரங்கள் என்ன? என்ற பொருள் பற்றி பேசப்பட்டது.

இந்தியாவிலுள்ள மாநிலத்திற்கு உள்ள அதிகாரம் தரப்படவேண்டும்என்று இந்தியப் பேரரசு வலியுறுத்தி வந்தது சட்டம் ஒழுங்குபற்றிபுதிதாக அமைய இருக்கிற மாநிலத்திற்கு அதிகாரம்தரவேண்டும் என்று பேசப்பட்டது காவல் துறையில் தமிழர்கள் நியமிக்கப்பட வேண்டும் என்றும் பேசப்பட்டது.

இதுபோன்ற முக்கியமான விதிமுறைகள் பலமுறை பேசி முடிவெடுக்கப்பட்டது இலங்கை பேச்சுவார்த்தை பற்றி தொடர்ந்து கவனித்து கொண்டு வந்தவர்களுக்கு இவைகள் நன்றாக தெரியும் இதைக் கவனிக்காதவர்கள் தான் அவசரமாக ஏற்பட்ட முடிவு என்று சொல்கிறார்கள்.

## ஒப்பந்தம் தேவைதானா?

இந்திய-இலங்கை ஒப்பந்தம் தேவைதானா என்று கேட்டார்கள், இந்த ஒப்பந்தம் தேவை இல்லை என்றால் வேறு வழி என்ன என்று சொல்ல வேண்டும். தொடர்ந்து நாற்பது ஆண்டு காலம் போராட்டம் நடந்து கொண்டே வந்துள்ளது' ஒவ்வொரு போராட்டத்திலும் இன்னல்களை அனுபவிப்பவர்கள் தமிழர்கள் தான் இலங்கை அரசுக்கு போக்குவரத்து சாதனம், தகவல் தொடர்பு விளம்பரங்கள், முன்னேறிய நாடுகளின் உதவிகள் ஆசியவை உண்டு தரைப்படை, ஆகாயப்படை, கடற்படை முதலிய வசதிகளை கொண்டு தமிழ் இனத்தை சிங்களஅரசு அழித் கொண்டே வந்தது.

பாகிஸ்தான், சீனா, அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகள் நவீன ஆயுதங்களை சிங்கள ராணுவத்திற்கு வழங்கிய வண்ணம் இருந்தது இஸ்ரேல், இங்கிலாந்து போன்ற நாடுகளின் கூலிப்படைகளை வைத்துக்கொண்டு சிங்கள ராணுவம் தமிழ்மக்களை இனப்படுகொலை செய்து கொண்டு வந்தது. இலங்கையில் எந்த அரசு ஏற்பட்டாலும் பெரும்பான்மை சிங்கள மக்களுக்கு ஆதரவாகவும் புத்த பிட்சுக்களுடைய ஆலோசனைப்படியும் ஆட்சி நடத்தவேண்டிய கட்டாயத்தில் இலங்கை அரசு இருக்க வேண்டியுள்ளது. இந்த இக்கட்டான நிலையில் ஒரு ஒப்பந்தத்தை போட்டு அழிவிலிருந்து நமது மக்களை காப்பாற்ற வேண்டியது தவிர்க்க முடியாத ஒன்றாகும்.

## போரை நிறுத்த வேண்டுகோள்

விடுதலைப் புலிகளின் கிழக்கு மாநில தளபதிகள் குமரப்பா, புலேந்திரன் உள்ளிட்ட பதிமூன்று பேர் தற்கொலை செய்துகொண்ட உடனேயே புரட்சித்தலைவர் உருக்கமான வேண்டுகோள் விட்டார்.

யாழ்ப்பாணம் மோதல்களை நிறுத்தவேண்டும். பேச்சுவார்த்தை நடத்த வேண்டும் இந்த பிரச்சினைக்குசுமுகமான முறையில் தீர்வு ஏற்பட எனது அயராத முயற்சி எப்பொழுதும் உண்டு என்று புரட்சித் தலைவர் தெரிவித்தார்.

## மக்களாட்சி

புரட்சித் தலைவர் ஆட்சி மக்களுக்காக, மக்களால் ஏற்படுத்தப்பட்ட மக்கள் ஆட்சியாகநடந்து வருகிறது, ஜனநாயகம் என்பது ஓட்டுக்களை சேகரிப்பதுடன் ஓட்டுப் போட்ட ஏழை எளிய மக்களுக்கு திட்டங்களை தீட்டி செயல்படுத்துவதுதான் என்பதை புரட்சித்தலைவர் நடைமுறைப் படுத்தினார். ஏழைகளுக்காக திட்டங்களை தீட்டினார் பிற்படுத்தப்பட்ட மக்களுக்காக வறுமைக்கோட்டிற்கு கீழே உள்ள மக்களுக்காக ஓலைக்குடிசையிலே இருக்கிற மக்களுக்காக திட்டங்களை தீட்டிசெயல் உருவம்கொடுத்தார் தீட்டிய திட்டங்கள் நிறைவேற்றப்படும் பொழுது திட்டத்தின் நோக்கம் நிறைவேற்றப்படுகிறதா என்பதை கண்காணித்தார்.

## திட்டங்கள்

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் ஆட்சிக்கு வந்த பிறகு தீட்டிய திட்டங்களை பட்டியல் போட்டால் காலம் இடம் தராது.

## சத்துணவுதிட்டம்

இரவென்றும், பகலென்றும் பாராமல் உழைத்து உருக்குலைந்துள்ள மக்கள் லட்சக் கணக்கில் உள்ளார்கள் நாள் முழுவதும் உழைத்தாலும் நிம்மதியாக உண்ண முடியாமல்உடுக்கமுடியாமல்ஓட்டைகுடிசையில் உள்ள மக்கள் ஆயிரக்கணக்கில் உள்ளார்கள் அவர்களுடைய குழந்தைகளுக்கு சத்துணவு ஏது, படிப்பது எப்படி ஆடைகளுக்கு எங்கே போவார்கள். இந்த குறைபாட்டினை நீக்க சுமார் 90 லட்சம் குழந்தைகளுக்கு இலவச உணவு உடை, நோட்டுப்புத்தகங்கள் அரசு சார்பில் வழங்கப்படுகிறது அது மட்டுமாஇலவசமாக காலணி வழங்கப்படுகிறது இந்த திட்டத்திற்காக அரசு செலவழிப்பது ஆண்டுதோறும்சுமாராக 190 கோடி ரூபாயாகும்.

## இலவச காலணி வழங்கும் திட்டம்

ஏழை எளிய தாய்மார்கள் நாள் முழுவதும் உழைக்கிறார்கள் வயிறார உண்ண முடிவதில்லை அவர்கள் காலணி வாங்குவதற்கு காசுக்கு எங்கே போவார்கள் இந்த குறைபாட்டினை நீக்க அவர்களுக்கு காலணி வழங்கும் திட்டம் தீட்டப்பட்டுள்ளது.

மக்களுக்கு உணவு அளிப்பவர்கள் உழவர்கள்தான் ஆனால் அவர்களுடைய வாழ்க்கையில் தொடர்ந்து இடுக்கண்கள்தான்- வறுமைதான். முன்னேற்றம் என்பதே இல்லை பொருளாதார வளர்ச்சி என்பது உழவர்களை பொறுத்தவரையிலும் அவர்களுக்கு முயல் கொம்புதான் ஆகையால் புரட்சித்தலைவர் அரசு உழவர்களுக்கு ரூபாய் 320 கோடி கடன் சுமையை தள்ளுபடி செய்துள்ளது.

## இருக்க இடம்

ஏழை எளிய மக்களும் நடுத்தர குடும்பத்தினரும் இருக்க இடம் இல்லாமல் பல ஆண்டுகளாக கஷ்டப்படுகிறார்கள். இந்த குறையை நீக்குவதற்காக 30 லட்சம் வீடுகள் கட்ட அரசு திட்டம் போட்டுள்ளது.

இவ்வாறு எஸ். டி. எஸ். பேசினார்.

# பசும்பொன் மாவட்டத்தில் சட்டமன்ற மனுக்கள் குழு

சிவகங்கை, அக், 23- பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம் சிவகங்கைக்கு 27-ந் தேதி காலை 10 மணிக்கு சட்டமன்ற துணை சபாநாயகர் வி. பி. பாலசுப்பிரமணியம் தலைமையில் சட்டமன்ற பேரவையின் மனுக்கள் குழு வருகிறது என்றுமாவட்ட ஆட்சித் தலைவர் ஆர். கோபாலன் தெரிவித்துள்ளார்,

சிவகங்கையில் புதிய மாவட்ட ஆட்சியர் வளாகத்திலுள்ள சமுதாயக் கூடத்தில் 27-ந்தேதி காலை 10 மணிக்கு பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் உள்ள மக்களின் குறைகளை நேரிடையாக இக்குழு கேட்டறியும்.

எனவே பொதுமக்கள் தங்களின் குறைகளை நேரிடையாக அலலது மனுக்கள் மூலமாக இக்குழுவிடம் கொடுத்து பயனடையுமாறு மாவட்டஆட்சித் தலைவர் ஆர் கோபாலன் கேட்டுக்கொண்டுள்ளார்.

# மன்னார் குடியில் நிலக்கரி கண்டுபிடிப்பு

சென்னை, அக். 23- தமிழகத்தில் மேலும் இரண்டு இடங்களில் பழுப்பு நிலக்கரி கிடைக்கும் அறிகுறிகள் உள்ளன என்று நெய்வேலி பழுப்பு நிலக்கரிநிறுவனத்தலைவா நாராயணன் கூறினார்.

இது குறித்து அவர் நிருபர்களிடம் கூறியதாவது:

தமிழகத்தில் ஜெயங்கொண்ட சோழபுரத்திலும், மன்னார்குடியிலும் பழுப்பு நிலக்கரி கிடைக்கும் அறிகுறிகள் உள்ளன. இதற்காக அந்தப் பகுதிகளை தோண்டி எடுக்கும் முயற்சிகள் தீவிரமாக நடந்துவருகிறது

மன்னார்குடியைப் பொறுத்த வரையில் அங்கேநிலக்கரி அதிகஅளவில் கிடைக்கும்என்று தெரிகிறது.

## புதுவை

புதுவை மாநிலம் பாகூரில் 400 மில்லியன் டன் பழுப்பு நிலக்கரி கிடைக்கும் என்றும் தெரிகிறது. இதைத்தோண்டி எடுப்பதற்கான வேலைகள் துரிதமாக நடந்து வருகிறது-

இவ்வாறு நாராயணன் நிருபர்களிடம் கூறினார்.

# ரெயில் நிறுத்தம்: மக்கள் வசதிக்காக கூடுதல் பஸ்கள்

சென்னை, அக். 23- நாளை நடக்க இருக்கும் ரெயில் நிறுத்த போராட்டத்தை யொட்டி தமிழகத்தில் நாளை ரெயில்கள் ஓடாது என ரெயில்வே நிர்வாகம் அறிவித்துள்ளது

இலங்கையில் நடைபெறும் சம்பவங்களையொட்டி தமிழகத்தில் நாளை ரயில் நிறுத்தப் போராட்டம் நடத்தப் போவதாக அறிவிக்கப்பட்டது.

இதையொட்டி தமிழகம் முழுவதும் ரயில்கள் ஓடாது எனரயில்வே நிர்வாகம் அறிவித்துள்ளது.

இந்த போராட்டத்தை யொட்டி இன்று (வெள்ளிக் கிழமை) இரவு 10 மணி முதல் நாளை மறுநாள் (ஞாயிற்றுக்கிழமை) காலை 6 மணி வரை தமிழ்நாட்டில் அனைத்து ரெயில்களும் ரத்து செய்யப்படுவதாக ரெயில்வே நிர்வாகம் அறிவித்துள்ளது.

அதன்படி இன்று இரவில் இருந்து ஞாயிற்றுக் கிழமை காலை வரை தமிழ்நாட்டில் எல்லா ரயில்களும் ஓடாது

''பிராட்கேஜ்'' ''மீட்டர் கேஜ்'' ரெயில்கள் மற்றும் புறநகர் மின்சார ரெயில்கள் உட்பட அனைத்து ரெயில் சேவைகளும் ரத்து செய்யப்படுகின்றன.

சில ரெயில்கள் ஆங்காங்கே நிறுத்தப்படுகின்றன.

இதன்படி ஞாயிறன்றுரெயில் போக்குவரத்தில் சிலமாறுதல் செய்யப்படுகின்றன.

சென்னையில் இருந்து புறப்படும் 'நெல்லை எக்ஸ்பிரஸ்' ரெயில் மதுரையில் நிறுத்தப்பட்டு ஞாயிற்றுக் கிழமைகாலை6மணிக்குபிறகு நெல்லை புறப்பட்டுச் செல்லும்.

நெல்லையில் இருந்து இன்று புறப்பட்டு சென்னை வரும் நெல்லை எக்ஸ்பிரஸ் ரயில் இரவில் திருச்சியில் நிறுத்தப்படுகிறது.

சென்னையிலிருந்து புறப்பட்டுச் செல்லும் ''சேது எக்ஸ்பிரஸ்'' ரெயில் இரவில் மானாமதுரையில் நிறுத்தப்படுகிறது. ஞாயிற்றுக் கிழமை அங்கிருந்துபுறப்பட்டுராமேசுவரம்செல்லும்.

இதேபோல் பிராட் கேஜ் ரயில் வசதிப்படி- நிறுத்தப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது,

## பஸ் வசதி

ரெயில் ஓடாததையொட்டி பயணிகளுக்கு வசதியாக கூடுதல் பஸ்கள் விடப்படுகின்றன

தமிழ்நாடு அரசு பேருக்கு போக்குவரத்துக் கழகங்கள் மாநிலத்தின் பல பகுதிகளிலும் திருவனந்தபுரம், பெங்களூர் போன்ற இடங்களுக்கும் கூடுதலாக பேருந்துகள் ஓடும் வகையில் வசதிகள் செய்துள்ளன. குறிப்பாக சில தொலை தூர விரைவு ரயில் வண்டிகள் ரேணிகுண்டா கூடூர் சூளூர்பேட்டை ஆகிய ரயில் நிலையங்களில் நின்று விடும் நிலையில் இவ்விடங்களிலிருந்து சென்னைக்கும் சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்திலிருந்து மேற்படி இடங்களுக்கும் போதுமான அளவுக்கு பேருந்துகள் விடவும் அரசு பேருந்து கழகங்கள் ஏற்பாடு செய்துள்ளன.

# குருவாயூர் பொன்னம்மாள் காலமானார்

சென்னை, அக் 23- கர்நாடக இசைப்பாடகி குருவாயூர் பொன்னம்மாள் (வயது 57) சென்னையில் காலமானார் கடந்த சில மாதங்களாக அவர்உடல் நலமின்றியிருந்தார் இவர் கவிஞர் கு.சா. கிருஷ்ணமூர்த்தியின் துணைவியார் மிருதங்கவித்வான் குருவாயூர் துரை, வயலின் வித்வான் ராஜாமணி ஆகியோரின் சகோதரி இவர். பொன்னம்மாளுக்கு குழந்தைகள் இல்லை.

முன்னாள் அமைச்சர் ஆர்.எம்.வீ. ம. பொ. சி. சீர்காழி கோவிந்தராசன் வீணைசிட்டிபாபு பாடகி பி. லீலா, இசை அமைப்பாளர் டி. ஜி. லிங்கப்பா மற்றும் பல கலைஞர்கள் வந்து இறுதி அஞ்சலி செலுத்தினர்.

# தேவையற்றபோராட்டம் நடத்தும் கருணாநிதி: அருணாசலம் கண்டனம்

சென்னை, அக். 23- தேவையற்ற போராட்டங்களை நடத்துவதில் கருணாநிதி சாதனை புரிந்துள்ளார் என அமைச்சர் அருணாசலம் கூறினார்.

புரட்சித்தலைவரின் பிறந்த நாள் விழாவும் கழகத்தின் 16-வது ஆண்டு விழாவும் தண்டையார் பேட்டையில் நடந்தது. விழாவில்அமைச்சர் அருணாசலம் கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார் அப்போது அவர் பேசியதாவது:-

கழகம் தோன்றி இன்று 16 வதுஆண்டில் நடைபோட்டுக் கொண்டிருக்கிறது புரட்சித் தலைவரின் தலைமையில் அமைந்த அரசு பொற்கால சரித்திரம் படைத்து ஏழை எளியமக்களை வாழ வைத்துக் கொண்டிருக்கிறது.

ஆனால் கருணாநிதி அண்ணா பெயரில் அறிவாலயம் என்று கொள்ளையடித்தார், அண்ணாவின்கொள்கைகளை காற்றில் பறக்க விட்டு விட்டுஅண்ணாவின்பெயரால் வசூல் வேட்டை நடத்தினார் புரட்சித்தலைவர் தலைமையில் அண்ணாவின் அரசு போடுகின்ற திட்டங்களை சீர்குலைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் தேவையற்ற போராட்டங்களை நடத்துகிறார்.

ஒருசில ஊராட்சி பேரூராட்சிகளை வைத்துக் கொண்டு அண்ணாவின் அரசு மக்களுக்காக செயல்படுவதை தடுக்கும் தடைக்கல்லாக கருணாநிதி செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்.

புரட்சித்தலைவர் நம்பிக்கையுள்ளத் தொண்டர்களை வைத்துள்ளார் அவர்கள் மூலம் மக்களுக்கு நல்ல பல திட்டங்களை செயல்படுத்தி வருகிறார்,

## வசூல் வேட்டை

ஆனால் வறட்சி நேரத்திலும் வாட்டிய கொடுமையிலும் தனது சுயலாபத்துக்காக வசூல் வேட்டையை வெற்றிகரமாகசெயல் படுத்தினார் கருணாநிதி.

புரட்சித்தலைவர்அண்ணாவின் கொள்கைகளை ஏற்று அன்று அண்ணா தி.மு. கழகத்தை ஆரம்பித்தார். அண்ணாவின் கொள்கைகள் மக்களின் மனதில் பதிய வேண்டும் என்பதற்கு அண்ணா படத்தை பச்சை குத்த வைத்தார்.

அண்ணாவின் உருவப் படத்தை கழக கொடியிலே வரைந்தார். மக்கள் மனதில் என்றும் மறையாத அறிவாலயமாக அண்ணாவை பதிய வைத்தவர் புரட்சித்தலைவர்

இலங்கை பிரச்சனை 1956-ல் தொடங்கியது அதற்கு பின் ஆட்சியிலிருந்த கருணாநிதி இலங்கைத்தமிழருக்கு என்ன செய்தார். குட்டிமணி, ஜெகன் ஆகியோரைக் காட்டிக் கொடுத்தார். இவர்களின் உயிரைப் பறித்தார்.

ஆனால் அவர்களின் குடும்பத்துக்கு ஆதரவாக அவர்களை வாழ வைக்கும் இதய தெய்வமாகபுரட்சித்தலைவர் விளங்குகிறார்.

கருணாநிதி 'பந்த்' நடத்தப்போவதாக அறிவித்துள்ளார். ஈழத்தமிர் பிரச்சினையில் புரட்சித்தலைவரின் முயற்சியால்தானேஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது இன்றுநடந்து வரும் சிறு சச்சரவுகளையும் முதல்வர் புரட்சித்தலைவர் பிரதமர்ராஜீவுடன் அமெரிக்காவில் கலந்து பேசி முடிவுக்குக் கொண்டுவர முயற்சி மேற்கொண்டுள்ளார்.

அதை மனதில் கொண்டு ஏற்பட்ட பீதியால் கருணாநிதி பந்த் என்று அறிவிக்கிறார். கருணாநிதி விரைவில் கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறும் வாய்ப்பு உள்ளது தேவையற்ற போராட்டங்களை நடத்தி தோற்றுப்போனதற்காக கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறுவார்.

ஆனால் புரட்சித் தலைவர் சாதனை மேல் சாதனை பட்டியலைகுவித்து கின்னசில் இடம் பெறுவார்.

எல்லோரும் போனஸ் கேட்டு போராட்டம் நடத்தினார்கள். ஆனால் யாருமே சிந்திக்காத போனஸே கேட்காத ஏழை எளிய கிராம மக்களின் தேவையறிந்து அவர்களுக்குவேட்டி, சேலை, அரிசி என்று இலவசமாக வழங்கியவர் புரட்சித் தலைவர், அவர் அமெரிக்காவில் இருந்தாலும் அவரின் எண்ணமெல்லாம் தமிழக மக்களின் நலனில்தான்உள்ளது. நான் வேட்டி சேலை வழங்கும் விழாவில் கேட்டேன் இந்த வேட்டி சேலையை உங்களுக்கு தருவது யார் என்று அப்போது ஒரு முதிய தாய் எம்.ஜி.ஆர் என்று உற்சாகத்துடன் கூறினார்.

அந்த அளவு மக்கள் புரட்சித்தலைவரை தெரிந்துவைத்துள்ளனர் அவரும் ஏழை எளியமக்களின் இதயத்துடிப்பை அறிந்து வைத்துள்ளார்.

புரட்சித்தலைவர் ஏழை எளிய மக்கள் வாழ்வு வளம் பெற திட்டம் தீட்டுகிறார். அந்த திட்டங்களைசிதைத்து பதவி மோகத்தால் பணி செய்ய இடையூறாக கருணாநிதி செயல்படுகிறார்.

அண்ணா திமுகழகம் ஒரு குட்டை என்று அவர் நினைக்கிறார். அதில் மீன் பிடிக்க நினைக்கிறார். கழகம் ஒரு கடல் அதை அவர் கலக்க நினைத்தால் கலங்கிப்போவது கருணாநிதி தான்.

இவ்வாறு அமைச்சர் அருணாசலம்பேசினார்,

இந்தக் கூட்டத்துக்கு கோவிந்தசாமி தலைமை வகித்தார் எஸ்.ஆர்.அண்ணாமலை, டி.எஸ். அருணாசலம் ஆகியோர்முன்னிலை வகித்தனர். மோகனசுந்தரம்வரவேற்புரையாற்றினார்,

இந்த கூட்டத்தில்சென்னை மாவட்ட எம்.ஜி.ஆர். மன்ற செயலாளர்மதுசூதனன் எஸ். என். பழனி ஏ.எஸ். அருணாசலம், பி. எஸ். காளிமுத்து, மூர்த்தி, பி. ஆர். பாலு, பொன்னையன். செல்வம் மற்றும் பலர் பேசினர். சுந்தரம் நன்றி கூறினார்.

முன்னதாக டி.எம். ஜானி கலைக் குழுவினரின் கலை நிகழ்ச்சி நடந்தது.

## சமூகநலத்துறை

அரசாணை (நிலை)எண் 1887
நாள்;12-10-87

### நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 6 ஆம் பிரிவின் கீழான விளம்பல் அறிவிக்கை

கீழ்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக கையகப்படுத்த வேண்டியுள்ளது என்று தமிழ்நாட்டு அரசு மன நிறைவடைந்திருப்பதோடு அந்நிலங்களுக்கு வழங்கப்பட வேண்டிய இழப்பீட்டுத்தொகை முழுவதும் பொது வருவாய்களிலிருந்து செலுத்தப்பட வேண்டும் என்றும் அவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது. ஆகவே 1894-ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச்சட்டம் 1-1894) 6-ம் பிரிவின்படி தமிழ்நாட்டு ஆளுநர் அவர்கள் கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளதும் 1-35-5 எக்டேரைக்கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள்ஒரு பொது நோக்கத்திற்காக, அதாவது செங்கல்பட்டு மாவட்டம் செய்யூர் வட்டம் 356 நெடுமரம் கிராமத்தில் குடியிருக்கும் ஆதிதிராவிடர்களுக்கு வீட்டு மனை வழங்கப்படுவதற்காக தேவைப்படுகின்றன என்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலங்களின் வரைபடங்கள் தனி வட்டாட்சியர் (நில எடுப்பு, ஆதிதிராவிடர் நலம்) மதுராந்தகம் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளது. அவற்றை அலுவலகப் பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

#### விவர அட்டவணை

மாவட்டம்-செங்கல்பட்டு வட்டம்- செய்யூர்
கிராமம்-356 நெடுமரம்

| நன்செய் அல்லது புன்செய் என்ற நிலத்தின் விவரிப்பும் புல எண்ணும். | நிலச்சொந்தக்காரரின் (பட்டாதாரரின்) அல்லது அனுபவதாரரின் பெயர் | கையகப்படுத்தவுள்ள பரப்பளவு ஹெக்டேரில் | தரிசா அல்லது பயிரிடத்தக்கதா? (மரங்கள் கட்டடங்கள் கிணறுகள் இருந்தால் குறிப்பிடவும்) |
|---|---|---|---|
| புன்செய் 334-2பி | லட்சுமிகாந்தம்மாள் க-பெ ஸ்ரீராமுலு ரெட்டியார் ராதாகிருஷ்ணன் த-பெ ஸ்ரீராமுலு ரெட்டியார் பிரேமாவதி க-பெ அனந்தராமன் தெராசா அம்மாள்க-பெமுனுசாமி | 0-01-5 | தரிசு |
| புன்செய் 339-1பி2பி | கதிர்வேல் நாயக்கர் த-பெ குப்புசாமி நாயக்கர் | 0.08.5 | தரிசு |
| புன்செய் 339-2 | குப்புசாமி ரெட்டியார் ஆறுமுக செட்டியார் சுப்ரமணிசெட்டியார் | 0.41.0 | தரிசு |
| புன்செய் 339-3 | வாசுதேவன் சந்திரன் தேவேந்திரன் தபெ ராமலிங்கம் நாயக்கர் மனோகரி, க.பெ ரங்கன் | 0.43.5 | தரிசு |
| புன்செய் 339-4 | ராமுநாயக்கர் | 0.41.0 | தரிசு |

சோ.குமாசுவாம்
அரசு துணைச் செயலாளர்
சமூக நலத் துறை

டி.ஐ.பி,ஆர்.,393-செங்கை-87:ஏடிடி,

Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by all India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson manickam Road, MADRAS. 600 029.